14th February 1959]

SRI A. VEDARATHNAM : புற்று நோய்க்கு சரியான சிகிச்சை எது என்று தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறது ? அந்த சிகிச்சை மற்ற இதர ஆஸ்பத்திரிகளிலும் கிடைக்கும்படிச் செய்வதற்கு அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக் கொள்ளுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த "ரேடியம் தெரபி" தான் இப்பொழுது அமுலில் இருக்கிறது. அதுவும் இப்பொழுது புதுமுறையில், "கோபால்ட் பீம்" என்று புதிதாக விஞ்ஞான முறையில் கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறது. அது பிரயோஜனகரமாக இருக்கிறது என்று தெரிகிறது. அடையார் கான்ஸர் இன்ஸ்ட்டிட்யூட்டில் இருக்கிறது. கானடாவிலிருந்து உதவி வரப்போகிறது. ஜெனரல் ஆஸ்பத்திரியில் இன்னும் அதிகமாக இதை விஸ்தரிக்க திட்டமிருக்கிறது. மற்ற ஜில்லாக்களில் இதைச் செய்வது அவ்வளவு சுலபமல்ல. சிறிய அளவில் "ரேடியம் தெரபி" மாத்திரம் ஆங்காங்கு செய்யலாம்.

SRI S. RAMALINGA PADAYACHI : ஸார், இந்தப் புற்றுநோய் அதிகமாக பீடி, சிகரெட் இவைகள் குடிப்பதினால்தான் வருகிறது என்று மருத்துவர்கள் சொல்லுகிறார்களே, அது உண்மையா ? அப்படியானால் அதை தடுப்பதற்கு அரசாங்கம என்ன நடவடிக்கை எடுக்கும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி ஒன்றுபட்ட அபிப்பிராயம் இல்லை. இருந்தாலும் பீடி, சிகரெட் குடிக்காமல் இருப்பது நல்லது.

SRI T. T. DANIEL : In view of the fact that the treatment for cancer is now very costly, will the Government consider the desirability of finding some ways so that the treatment may be made available for all poor cancer patients?

THE HON. SRI M. A. MANICKAVELU : இன்னும் ஏதாவது விஞ்ஞான முறைகளில் வழிகளை கண்டுபிடித்தால் குறைந்த செலவில் இந்த சிகிச்சையை செய்து கொள்ள முடியும். ஆனால் இதுவரையிலும் குறைந்த செலவில் வழிகளை கண்டு பிடிக்கவில்லை.

SRI A. GOVINDASAMY : ஸார், இந்த புற்றுநோய் அறவே வராமல் தடுக்கப்படுகிறதா ? அல்லது மேலும் பரவாமல் இருப்பதற்காக சிகிச்சை செய்யப்படுகிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆரம்ப கட்டத்திலேயே சிகிச்சை செய்து வருவார்களேயானால் அவர்களுக்கு நிவர்த்தி செய்ய முடியும் என்று நம்புகிறேன்.

### *Fair Price Shops*

* 348 *Q.*—SRI M. KALYANASUNDARAM :
SRI K. SATTANATHA KARAYALAR : } Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Fair Price Shops functioning in the State as on the 31st December 1958;

(*b*) the price at which rice is sold at these shops; and

(*c*) the total quantity of rice sold during the months of September, October, November and December 1958 (month by month)?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 469.

(*b*) The sale of rice through Fair Price Shops has been stopped with effect from the 1st March 1958. Only wheat is being continued to be sold through these shops.

(*c*) Does not arise.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், சமீப காலத்தில் அனேக மலிவு கடைகள் திறக்கப்பட்டிருக்கின்றன. அந்த கடைகளுக்கு அரிசி எங்கே இருந்து கிடைத்தது ? அரசாங்கத்திலிருந்து அரிசி கொடுக்கப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சமீபத்தில் திறக்கப்பட்ட மலிவு கடைகள் அரசாங்கத்தால் திறக்கப்பட்டவை அல்ல. தனிப்பட்ட வியாபாரிகள் முன்வந்து தாங்களாகவே குறைந்த விலைக்கு விற்பதற்கு திறக்கப்பட்ட கடைகளாகும்.

SRI N. K. PALANISAMI : இம்மாதிரி அதிகமான கடைகள் திறந்தால் அரிசியின் விலை குறையும் என்று சர்க்கார் கருதுகின்றதா ? அவ்விதமென்றால் சர்க்கார் ஏன் அதிகமான கடைகளை திறக்கக்கூடாது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் விசாரித்த வரையில் இப்போது விலைவாசிகள் எல்லாம் குறைந்து கொண்டுதான் வருகின்றன. நியாய விலை கடைகள் திறப்பதினால் மாத்திரம் விலைவாசி குறைந்துவிடும் என்று எதிர்பார்ப்பதற்கு இல்லை. அதிகமான கடைகள் திறந்தால் குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கு வசதியாக இருக்கும்.

SRI S. LAZAR : ஸார், இவ்விதம் தனிப்பட்ட வியாபாரிகள் முன்வந்து நியாயவிலைகடைகள் திறக்க முன்வந்து மக்களுக்கு அதிகமான வசதியை ஏற்படுத்திக்கொடுப்பதால் தனிப்பட்ட வியாபாரிகளை ஊக்குவிக்கும் நோக்கத்தோடு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது அரசாங்கமே அதிகப்பட்ச விலையை நிர்ணயம் செய்து அரசாங்கமே தான்யங்களை வாங்குவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. இந்த நிலையில் நியாயவிலை கடைகளை அதிகமாக திறக்கவேண்டும் என்று தனிப்பட்ட வியாபாரிகளை அரசாங்கம் வற்புறுத்த வேண்டிய தேவையில்லை என்று கருதுகின்றது.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்த மாதிரி நியாயவிலை கடைகளை திறந்து அதன் மூலம் குறைந்த விலையை நிர்ணயித்து, அரிசி அந்த விலைக்குக் கிடைக்காவிட்டாலும் அதிலிருந்து தொழிலாளர்களுடைய பஞ்சப்படி விகிதத்தைக் குறைப்பதற்கு அரசாங்கத்திற்கு ஏதாவது எண்ணம் இருக்கிறது என்று தொழிலாளர்கள் கருதுகிறார்களே, இது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விலைவாசி குறைந்தால் நிச்சயமாக வாழ்க்கைச் செலவு குறையும். அதிலிருந்து பஞ்சப்படியும் குறையும். இதனால் தொழிலாளர்கள் வருத்தப்பட மாட்டார்கள், தொழிலாளர்கள் இதை வரவேற்கத்தான் செய்வார்கள்.

SRI K. SATTANATHA KARAYALAR : தனிப்பட்ட வியாபாரிகள் இவ்விதம் மலிவு கடைகளை திறக்க முன்வந்திருப்பதின் நோக்கம் அரசாங்கம் தான்யங்களை கொள்முதல் செய்கின்ற சமயத்தில் அவர்களுக்கு விநியோக உரிமை போன்ற ஏதாவது சலுகை கிடைக்கும் என்ற எண்ணத்தின்பேரில்தான் இவ்விதம் தனிப்பட்ட முறையில் கடைகளை திறக்க

முன் வந்தார்கள் என்பது தெரியுமா? அவ்விதம் கிடைக்காது என்ற எண்ணத்தில் இப்போது அதிமான வியாபாரிகள் கடைகளை மூடிவிட்டார்கள் என்பதும் அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு சலுகை கிடைக்கும் என்று அவர்கள் எதிர்பார்ப்பதற்கில்லை. அவர்கள் அவ்வாறு முயற்சி எடுத்ததை சர்க்கார் பாராட்டுகின்றது. அவர்கள் அதற்காக எதாவது சலுகை கேட்பார்களானால் அதுவும் பரிசீலக்கப்படும்.

*Hospital guide for the Government General Hospital, Madras*

MR. SPEAKER : The hon. Member Sri Jagannathan is not in his seat. The question and answer will be printed in the official proceedings.

* 349 *Q*.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any Hospital Guide for the Government General Hospital, Madras, has been printed ; and

(*b*) if so, the number of copies distributed so far?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes. Sir.

(*b*) 315.

*Medical Colleges*

* 350 *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of students admitted in the Medical Colleges under the categories, (i) Scheduled Castes and Tribes; (ii) Most Backward Classes; (iii) Backward Classes and (iv) other classes, during the years 1955–56, 1956–57 and 1957–58; and

(*b*) the number of Christians amongst them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) A statement* is placed on the table of the House.

(*b*) The information is not available.

SRI K. VINAYAKAM : Sir, whereas candidates belonging to Most Backward Classes are clubbed with Backward Classes for matters of admission into these professional colleges and whereas they lose their chances, will Government consider the possibility of setting apart a separate percentage for students belonging to the Most Backward Classes in matters of admission?

THE HON. SRI M. A. MANICKAVELU : I can inform the hon. Member that the classification of Most Backward Classes has not been recognized for purposes of admission in colleges. There seems to be some legal difficulties and unless that is set right, it is not feasible.

---

* Printed as Appendix I on page 411 infra.